34-1

உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத்

# திருவாவடுதுறை ஆதீனமும்
# தலச் சிறப்புகளும்





ஆதீனக்குருமுதல்வர்

**ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள்**

திருவாவடுதுறை ஆதீனம்

வெளியீடு எண் : 649 (இலவச வெளியீடு)

உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத்

# திருவாவடுதுறை ஆதீனமும் தலச்சிறப்புகளும்

இது

திருவாவடுதுறை ஆதீனம்

24ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம்

**ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள்**

**கோடாபிஷேக விழா மலராக**

வெளியிடப்பெறுகிறது.




**மெய்கண்டார் ஆண்டு 790**

**விஜய ஆண்டு, சித்திரைத் திங்கள் 25,**

**08.05.2013 - புதன்கிழமை**

(சித்திரை - அசுவதி)

வெளியீடு எண்: 649

இலவச வெளியீடு

*நூலாக்கம்*

**முனைவர். ப. சுவாமிநாதன்** எம்.ஏ., பி.எட்., பிஎச்.டி.,

செல்: 9443484655

email: pswaminathanphd@gmail.com

*தொடர்புக்கு*

திருவாவடுதுறை ஆதீனத் தலைமை மடம் : 04364 232021

சரஸ்வதி மகால் நூலகம்&விற்பனை நிலையம் : 9487713042

'மெய்கண்டார்' ஆதீனத் திங்களிதழ் : 9443484655 / 9952528241

email: thuraisaiadheenam@gmail.com

website: www.thiruvavaduthuraiadheenam.com

facebook: thiruvavduthuraiadheenam

திருவாவடுதுறை ஸ்ரீ கோமுக்தீஸ்வரர் திருக்கோயில் : 04364 232055

திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்க சுவாமி திருக்கோயில் : 0435 2460660

மயிலாடுதுறை ஸ்ரீ மயூரநாத சுவாமி திருக்கோயில் : 04364 223779

சூரியனார்கோயில் ஸ்ரீ சிவசூரியப்பெருமான் திருக்கோயில் : 0435 2472349

திருப்பெருந்துறை ஸ்ரீ ஆத்மநாதசுவாமி திருக்கோயில் : 04371 233301

திருவீழிமிழலை ஸ்ரீ வீழிநாதசுவாமி திருக்கோயில்: 04366 273050

நல்லூர் ஸ்ரீ கல்யாணசுந்தரேஸ்வரர் திருக்கோயில் : 9363141676

திருமங்கலகுடி ஸ்ரீ பிராணநாதசுவாமி திருக்கோயில் : 0435 2470480

திருவாலங்காடு ஸ்ரீ வடாரண்யேஸ்வரர் திருக்கோயில் : 04364 232055

இலுப்பைப்பட்டு ஸ்ரீ நீலகண்டேஸ்வரர் திருக்கோயில் : 04364 223779

திருநீலக்குடி ஸ்ரீ மனோக்கியநாத சுவாமி திருக்கோயில் : 9159455050

திருமாந்துறை ஸ்ரீ அட்சயநாதசுவாமி திருக்கோயில் : 0435 2472349

ஆறுமுகநேரி ஸ்ரீ சோமநாதசுவாமி திருக்கோயில் : 9894267694

குறுக்குத்துறை ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்: 0462 2940147

திருநெல்வேலி ஸ்ரீ சந்தி விநாயகர் திருக்கோயில் : 0462 2331024

**வெளியீடு**

**திருவாவடுதுறை ஆதீனம்**

உ

சிவமயம்



ஆதீனக் குருமுதல்வர் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள்

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணை
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

- *காஞ்சிப் புராணம்.*

*( மாதவச் சிவஞான யோகிகள்).*

உ
சிவமயம்

# ஆதீனக்குருமுதல்வர் அருள்வரலாற்றுச் சுருக்கம்

உலகம் ஓர் குலம்; உலகு அனைத்தும் இன்புற வேண்டும் என்ற பரந்தமனம் படைத்தது ஆச்சாரியப் பரம்பரை. திருக்கயிலையில் தோன்றிய இப்பரம்பரை காலம் பல கடந்து இடையறாது இந்நாள் வரை வளர்ந்து வருகிறது. கயிலைப் பரம்பரையின் மெய்கண்ட சந்தான ஆச்சாரியர்களில் ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியரிடம் உபதேசம் பெற்ற ஸ்ரீ அருள்நமசிவாயரிடம் தீட்சை பெற்றவர் ஸ்ரீ சித்தர் சிவப்பிரகாசர். அவரிடம் சிவஞான அபிஷேகமும், உபதேசமும், ஆச்சாரிய பரம்பரையைப் பாதுகாத்து வர திருவாணையும் பெற்று, திருவாவடுதுறையில் ஆதீனத்தைத் தோற்றுவித்த முதற்பெரும் குருமூர்த்திகள் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள்.

இவர்கள் சோழ மண்டலத்தில் நாகை மாவட்டம் மயிலாடுதுறைக்கு மேற்கே 3 கி.மீ தொலைவில் அமைந்த மூவலூர் என்னும் ஊரில் பரம்பரைச் சைவ வேளாளர் குலத்தில் தோன்றியவர்கள். இவர்களது பிள்ளைத் திருநாமம் வைத்தியநாதன் என்பது. இளம் பிராயத்தில் இவர்கள் தம் பெற்றோருடன் புள்ளிருக்கு வேளூரில் (வைத்தீஸ்வரன் கோயில்) ஸ்ரீ வைத்தியநாத சுவாமியை வழிபட்டுத் திருவருளில் ஒன்றிய சிந்தையினராக மனமுருகி நின்றபோது, பெருமானே ஒரு சிவாச்சாரியர் திருமேனி தாங்கி வந்து சிவலிங்கத் திருமேனி ஒன்றினைத் தந்தருளிய பேறுடையவர்கள்.

தல யாத்திரையாகத் தம் அடியார் திருக்கூட்டத்துடன் மூவலூர் சேர்ந்த ஸ்ரீ சித்தர் சிவப்பிரகாசர், சிறிய பெருந்தகையாக விளங்கிய வைத்தியநாதரைக் கண்டார்கள். சிவஞானப் பேற்றிற்கு உரிய குறிகளையும் திருவருட் குறிப்பையும் உணர்ந்து, பெற்றோர் இசைவுடன் பிள்ளையைத் தம்முடன் அழைத்துக் கொண்டு திருவாவடுதுறையை அடைந்தார்கள்.

அங்கு ஸ்ரீ சித்தர் சிவப்பிரகாசர் அப்பிள்ளைக்கு ஞானதீட்சை புரிந்து நமசிவாயம் எனத் தீட்சாநாமம் சாத்தி, குரு பரம்பரையில் தாம் பெற்ற சிவஞான உபதேசத்தை அருளிச் சிவஞானானந்த அனுபவம் கைவருமாறு அனுக்ரகம் செய்தார்கள்.

குருமரபில் தாம் பெற்ற ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியர் பூஜை செய்த ஸ்ரீ ஞான மாநடராசப் பெருமானையும், தம்முடைய ஆத்மார்த்த மூர்த்தியையும் பூஜித்து வரும் அதிகாரத்தையும் வழங்கியருளி னார்கள். தாம் வீற்றிருந்த இடத்தில் வரைகீறி அமைக்கப்பெற்ற அறையுள் அமர்ந்து சைவ சித்தாந்த மரபு தழைக்கச் சிவஞான உபதேசம் செய்துவர ஆணையருளி, தாம் திருமறைக்காட்டிற்கு எழுந்தருளினார்கள்.

ஸ்ரீ நமசிவாய தேசிக மூர்த்திகள் தம் ஞானாசிரியர் திருவாணையின் வண்ணம் அவர் வகுத்த அறையிலிருந்து, வரும் பக்குவ ஆன்மாக்களுக்குச் சிவஞான உபதேசம் அருளிச் சுத்தாத்துவித சைவ சித்தாந்தப் பரிபாலனம் செய்து வந்தார்கள்.

இவ்வண்ணம் ஆதீன முதற்பெரும் குருமூர்த்திகளாக வீற்றிருந்து சுத்தாத்துவித சித்தாந்த நன்மரபு தழைக்கச் செய்த ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள், தங்கள் குரு சந்தானம் வளர்ந்தோங்கி வர, அம்பலவாண தேசிகருக்கு ஞானாபிஷேகம் செய்து துவிதீய ஆச்சாரியராக அமைத்து, ஒரு தை மாதம் அசுவதித் திருநாளில் சித்தாந்த சுத்தாத்துவித முக்தி அடைந்தருளினார்கள். ஆதீனக் குருமுதல்வர் குருமூர்த்தத்தில் நாள்தோறும் இருகாலம் பூஜைகள் நடைபெற்று வருகின்றன. மாதந்தோறும் அசுவதி நட்சத்திரத்தில் குருமூர்த்திகளுக்குச் சிறப்பு வழிபாடுகளும் தோத்திர நூல்கள் பாராயணமும் செய்யப்பட்டு வருகின்றன.

பிரதி வருடம் தை மாதம் அசுவதித் திருநாளில் (மகரத் தலைநாள்) ஆதீன முதற்பெரும் குருமூர்த்திகளாக விளங்கும் **ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின்** குருபூஜை விழா கொடியேற்றத்துடன் தொடங்கி தினமும் காலை, இரவு இருவேளைகளிலும் அபிஷேக ஆராதனைகளோடு பத்து நாட்கள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

மேலும் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளின் திருமேனியானது மூவலூர் (அவதார இல்லம்), காசி கண்ணப்பசாமி மடம், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில், விக்கிரமசிங்கபுரம் சிவந்தியப்பர் கோயில், திருநெல்வேலி சந்தி விநாயகர் கோயில்,

சுசீந்திரம், மதுரை, கிளை மடங்கள், பொதிகையடி குருபூஜை மடம், காசி தர்மம் விநாயகர் திருக்கோயில் ஆகிய தலங்களில் பிரதிட்டை செய்யப் பெற்று, பூஜைகளும் நடைபெற்று வருகின்றன. தை அசுவதி நன்னாளில் ஷெ தலங்களில் சிறப்பு ஆராதனைகளும் மாகேசுவர பூஜைகளும் நடைபெறுகின்றன.

இவ்வாறாக ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளின் வழிவழி வருகின்ற சிவஞான உபதேச, அபிஷேக பரம்பரையில், இந்நாளில் இவ்வாதீனத்து 24ஆவது குரு மகாசந்நிதானமாக **ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள்** சித்ராசன சிவஞானபீடத்தில் எழுந்தருளி அருளாட்சி செய்து வருகின்றார்கள்.

இவர்கள் ஞானபீடம் ஏற்றருளிய நாள் முதல் சித்தாந்த சைவ பரிபாலனமும் செந்தமிழ் பரிபாலனமும் ஆதீன சம்பிரதாயப்படி மரபு மாறாமல் அருளாட்சி புரிந்தருளுகின்றார்கள். ஆதீன ஆளுகையில் உள்ள திருப்பெண்ணாகடம் ஸ்ரீ மெய்கண்டார் திருக்கோயில், திருவீழிமிழலை, திருநல்லூர் முதலான சிவாலயங்களில் திருப்பணிகள் நடைபெற்று விரைவில் மஹாகும்பாபிஷேக விழாக்கள் நடைபெற அருளாணை தந்தருளியுள்ளார்கள். ஆதீனக் கிளை மடங்களான திருநெல்வேலி ஈசான மடம், மதுரைக் கிளை மடம், திருப் பெருந்துறை முதலான கிளை மடங்கள் புத்தாக்கம் செய்யப் பெற்றும் பிற கிளை மடங்களில் திருப்பணிகள் நடைபெற்றும் வருகின்றன.

ஆதீன ஆளுகையில் தொடக்க, நடுநிலை, மேனிலைப் பள்ளிகள் நன்கு நிருவகிக்கப்பட்டு அருளுவதுடன் திருவிடைமருதூர் அருகிலுள்ள முத்தூர் கலைமகள் உதவிபெறும் தொடக்கப் பள்ளியை ஆதீன ஆளுகைக்கு 17.04.2013ல் ஏற்றருளி பரபாலனம் செய்தருளுகின்றார்கள். திருவாவடுதுறையில் கலை அறிவியல் மற்றும் தொழில் நுட்பக் கல்லூரிகள் தொடங்குவதற்கு அருளாணை தந்து ஆவன செய்தருளுகின்றார்கள்.

தமிழக அரசால் ஏற்படுத்தப்பட்டுள்ள இந்து சமய அறநிலையத்துறையில் உயர்நிலை ஆலோசனைக் குழுவில் அலுவல் சாரா உறுப்பினராகவும் செயலாற்றியருளுகின்றார்கள்.



திருவாவடுதுறை ஆதீனம்

24ஆவது குரு மகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக**

**பரமாசாரிய சுவாமிகள்**

சிவமயம்

# திருக்கயிலாய பரம்பரைத்
# திருவாவடுதுறை ஆதீனம்

நம் பாரதத் திருநாட்டிலுள்ள சைவத் திருமடங்களில் முதன்மையானதும் தொன்மை நலச் சிறப்புடனும் விளங்குவது திருவாவடுதுறை ஆதீனம். திருக்கயிலாயத்தில் ஸ்ரீகண்ட பரசிவத்திடம் உபதேசம் பெற்ற நந்தியெம் பெருமானிடம் வழிவழியாக உபதேசம் பெற்று வளர்ந்து வந்தமையால் இவ்வாதீனம் நந்தி மரபு எனப் போற்றப் பெறுகிறது.

சிவஞானபோதம் அருளிய மெய்கண்டார் வழி வந்தமையால் மெய்கண்ட சந்தானம் எனவும் இவ்வாதீனம் போற்றப்பெறுகிறது. திருவெண்ணெய்நல்லூரில் உள்ள மெய்கண்டாரின் ஞானசமாதி திருக்கோயில் திருவாவடுதுறை ஆதீனத்தின் அருளாளுகையில் உள்ளது. இங்கு ஆதீனத் தம்பிரான் சுவாமிகளால் நாள் வழிபாடும், குருபூசைத் திருநாளில் (ஐப்பசி-சுவாதி) சிறப்பு வழிபாடும் செவ்வனே நடைபெற்று வருகிறது.

சித்தாந்த சைவத்தை இவ்வாதீனம் நன்கு பேணி வருவதற்கு ஆதீனத்து குருமகா சந்நிதானங்கள் அருளிய 14 பண்டார சாத்திரங்களும், தமிழகம் மற்றும் அயல் நாடுகளிலும் 63 கிளை மையங்களில் ஆதீனம் நடத்தி வரும் சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி வகுப்புகளுமே தக்க சான்றுகளாம். தேவாரம் திருவாசகம் முதலான பன்னிரு சைவத் திருமுறைகளை தக்க ஓதுவார் மூர்த்திகளைக் கொண்டு ஆதீனத் திருக்கோயில்களிலும் கிளை மடங்களிலும் ஓதச் செய்தும், அறிஞர் பெருமக்கள் வாயிலாக சொற்பொழிவுகள் ஆற்றச் செய்தும், திருமுறை நூல்களை உரைகளுடன் குறைந்த விலைக்குப் பதிப்பித்தும், திருமுறை நேர்முகப் பயிற்சி வகுப்புகளை நடப்பித்தும் சைவத் தமிழ் உலகிற்கு பெருந் தொண்டாற்றி வருகிறது திருவாவடுதுறை ஆதீனம்.

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

# திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் மகாசந்நிதானங்கள் சிவபரிபூரணமடைந்த விபரம்

# குருபூஜைகள் நடந்துவரும் விபரம்

| எண் | ஆசாரியர் திருநாமம் | காலம் | முத்தித்தலம் | மாதம் | நட்சத்திரம் |
|---|---|---|---|---|---|
| | [ சந்தானக் குரவர்கள் ] | | | | |
| 01. | அருள்திரு மெய்கண்ட தேவநாயனார் | நூல் செய்தது கி.பி. 1221 | திருவெண்ணெய் நல்லூர் | ஐப்பசி | சுவாதி |
| 02. | அருள்திரு அருணந்திசிவாசாரியார் | கி.பி. 1253 | திருத்துறையூர் | புரட்டாசி | பூரம் |
| 03. | அருள்திரு மறைஞானசம்பந்த சிவாசாரியார் | கி.பி. 1300 | திருக்களாஞ்சேரி ( சிதம்பரம் ) | ஆவணி | உத்திரம் |
| 04. | அருள்திரு உமாபதிசிவாசாரியார் | கி.பி. 1313 | கொற்றவன்குடி | சித்திரை | அஸ்தம் |
| | அருள்திரு அருணமச்சிவாயர் இவர்மாணவர் சித்தர் சிவப் பிரகாசர். இன்னும் இருப்பதாக ஐதீகம். கி.பி. 1350 | கி.பி. 1350 | கொற்றவன்குடி | மார்கழி | திருவாதிரை |

( அருள்திரு மெய்கண்ட தேவ நாயனார், அருள்திரு அருணந்தி சிவாசாரியார், அருள்திரு மறைஞான சம்பந்த சிவாசாரியார், ஆகிய குருமூர்த்தங்கள் துறைசையாதீன ஆளுகையில் உள்ளன . )

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 01. | அருள்திரு நமசிவாயமூர்த்திகள் ( திருவாவடுதுறை ஆதீனக் குருமுதல்வர் ) | கி.பி.1360-1625 | திருவாவடுதுறை | தை | அசுவதி |
| 02. | அருள்திரு மறைஞான தேசிகர் | | திருவாவடுதுறை | தை | சுவாதி |
| 03. | அருள்திரு அம்பலவாண தேசிகர் | | திருவாவடுதுறை | சித்திரை | அவிட்டம் |
| 04. | அருள்திரு உருத்திரகோடி தேசிகர் | | மதுரை | கார்த்திகை | அனுஷம் |
| 05. | அருள்திரு வேலப்ப தேசிகர் | | திருப்பூவணம் | கார்த்திகை | உத்திராடம் |
| 06. | அருள்திரு குமாரசாமி தேசிகர் | | சுசீந்திரம் | கார்த்திகை | உத்திராடம் |
| 07. | அருள்திரு (பின் ) குமாரசாமி தேசிகர் | | சுசீந்திரம் | ஆவணி | உத்திரட்டாதி |
| 08. | அருள்திரு மாசிலாமணிதேசிகர் | 1625 - 1658 | திருவெண்காடு | சித்திரை | உரோகிணி |
| 09. | அருள்திரு இராமலிங்க தேசிகர் | 1658 - 1678 | திருவாவடுதுறை | கார்த்திகை | அனுஷம் |
| 10. | அருள்திரு வேலப்பதேசிகர் | 1678 - 1700 | சங்கரன்கோயில் | புரட்டாசி | மூலம் |
| 11. | அருள்திரு (பின் ) வேலப்பதேசிகர் | 1700 - 1730 | திருப்பெருந்துறை | வைகாசி | பூரட்டாதி |
| 12. | அருள்திரு திருச்சிற்றம்பலதேசிகர் | 1730 - 1770 | திருவாவடுதுறை | ஆனி | பரணி |
| 13. | அருள்திரு அம்பலவாண தேசிகர் | 1770 - 1789 | திருவாவடுதுறை | மார்கழி | கேட்டை |
| 14. | அருள்திரு ( வேளூர் ) சுப்பிரமணிய தேசிகர் | 1789 - 1845 | திருவாவடுதுறை | கார்த்திகை | கார்த்திகை |
| 15. | அருள்திரு அம்பலவாண தேசிகர் | 1845 - 1869 | திருவாவடுதுறை | ஆனி | பூரம் |
| 16. | அருள்திரு ( மேலகரம் ) சுப்பிரமணிய தேசிகர் | 1869 - 1888 | திருவாவடுதுறை | மார்கழி | சுவாதி |
| 17. | அருள்திரு அம்பலவாண தேசிகர் | 1888 - 1920 | திருவிடைமருதூர் | சித்திரை | சதயம் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 18. | அருள்திரு சுப்பிரமணிய தேசிகர் | 1920 - 1922 | திருவாவடுதுறை | தை | பரணி |
| 19. | அருள்திரு வைத்தியலிங்கதேசிகர் | 1922 - 1937 | திருமயிலாடுதுறை | ஐப்பசி | அவிட்டம் |
| 20. | அருள்திரு அம்பலவாண தேசிகர் | 1937 - 1951 | திருவிடைமருதூர் | பங்குனி | திருவாதிரை |
| 21. | அருள்திரு சுப்பிரமணியதேசிகர் | 13.4.51 - 23.9.67 | திருவாவடுதுறை | புரட்டாசி | பரணி |
| 22. | அருள்திரு அம்பலவாணதேசிகர் | 23.9.67 - 7.4.83 | திருவாவடுதுறை | பங்குனி | திருவோணம் |
| 23. | அருள்திரு சிவப்பிரகாச தேசிகர் | 07.4.83 - 22.11.12 | திருவாவடுதுறை | கார்த்திகை | சதயம் |
| | ஒளிர்ந்த ஆசாரியர்கள் ( சின்னப்பட்டத்தில் இருந்து பரிபூரணமடைந்தவர்கள் ) | | | | |
| 01. | அருள்திரு தக்ஷிணாமூர்த்தி தேசிகர் | I ஆசாரியர் | திருவாவடுதுறை | மாசி | சித்திரை |
| 02. | அருள்திரு முத்தம்பலவாண தேசிகர் | 7ஆவது ஆசாரியர் | திருக்குற்றாலம் | மாசி | சித்திரை |
| 03. | அருள்திரு சிவக்கொழுந்து தேசிகர் | 8 ஆவது ஆசாரியர் | திருவாவடுதுறை | மார்கழி | மூலம் |
| 04. | அருள்திரு சுவாமிநாத தேசிகர் | 8 ஆவது ஆசாரியர் | திருவண்ணாமலை | கார்த்திகை | உத்திரம் |
| 05. | அருள்திரு வேலப்ப தேசிகர் | 10ஆவது ஆசாரியர் | திருப்பேரூர் | ஆனி | பரணி |
| 06. | அருள்திரு கனகசபாபதி தேசிகர் | 14ஆவது ஆசாரியர் | கல்லிடைக்குறிச்சி | தை | கார்த்திகை |
| 07. | அருள்திரு சுப்பிரமணிய தேசிகர் | 14ஆவது ஆசாரியர் | திருவாவடுதுறை | மாசி | அவிட்டம் |
| 08. | அருள்திரு நமச்சிவாய தேசிகர் | 16ஆவது ஆசாரியர் | கல்லிடைக்குறிச்சி | தை | கார்த்திகை |
| 09. | அருள்திரு அம்பலவாண தேசிகர் | 23ஆவது ஆசாரியர் | கல்லிடைக்குறிச்சி | தை | உத்திரட்டாதி |

# ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் துதிப்பாடல்கள்

ஆதீன பிரதம பரமாசாரிய சுவாமிகள் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளுக்கு காலை, இரவு இருபொழுதும் பூஜைகள் நடைபெறும். காலைப் பூஜை நிறைவில் மகா சந்நிதானங்கள் குருமூர்த்திகள் சந்நிதியில் மகா மண்டபத்தில் ஐந்து நமஸ்காரங்கள் சமர்ப்பித்து வழிபடுவார்கள். அப்பொழுது ஓதுவார் மூர்த்திகள் ஒவ்வொரு நமஸ்காரத்திற்கும் ஒரு திருப்பாடலாக ஸ்ரீ முத்தி பஞ்சாக்கர மாலைப் பாடல்களை விண்ணப்பம் செய்வார்கள்.

இரவுப் பூஜையை நிறைவு செய்து கொண்டு பூஜை தரிசிக்கும் அன்பர்களுக்கு மகாசந்நிதானங்கள் திருநீற்றுப் பிரசாதம் வழங்கி ஆசியருளுவார்கள். பின்னர் திருக்கோயில் முன், ஓதுவார் மூர்த்திகள் மாதவச் சிவஞான சுவாமிகள் அருளிய ஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர் மாலைத் திருப்பாடல்கள் பத்தையும், ஸ்ரீ கச்சியப்ப முனிவர் அருளிய பஞ்சாக்கர தேசிகர் அந்தாதிப் பாடல் ஒன்றையும் பாட மகாசந்நிதானங்கள் முன்மண்டபத்தில் பதினொரு நமஸ்காரங்கள் சமர்ப்பித்து வழிபடுவார்கள். இவை வழக்கத்தில் இருந்து வருகின்றன.

**அத்திருப்பாடல்கள் :**

## முத்திபஞ்சாக்கர மாலை

திருவே! என்செல்வச் சிறப்பே! சிவானந்தத் தெள்அமுத
உருவே! உருவமும் ஊருடன் பேரும்ஒன்றும்புணரா
அருவே! தெளிந்த அறிவே! மெய் யன்பர்க்கு அருளும் தெய்வத்
தருவே! தென் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே!

சுந்தரமால், அயன் வாழ்வும், ஐந் தாரின் சுவர்க்கவைப்பும்
இந்திர ஞாலம், கனாஎனக் கண்டுஉன் இணையடிக்கே
அந்தம்இல் காதலுற்று ஆராதஇன்பத்து அமர்ந்திருக்கத்
தந்தருள்! கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே!

பண்டுஅறி யாமை பிடித்துவிட்டேனை விடாதுபற்றிக்
கொண்டு, குணவழி விட்டுத் திருத்தி, என்கோது அகற்றிப்
புண்டரி கப்பதம் தந்தாய்க்குஎன் னால்ஒரு போகம் உண்டோ?
தண்தமிழ்க் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே!

மாயாபடலம் கிழித்து, அருள் ஞானம் விளங்கவைத்து, உன்
நேயஆனந் தத்தில் அமிழ்த்திடுவாய்; நித்த முத்தசுத்தத்
தூயா! சராசர பேதங்கள் யாவையும் தோற்றுவிக்கும்
தாயான கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே!

அரணங்கள் மூன்றும் எரித்தாய்! சரணம், அதிலும், அன்பர்
மரணம் படாதுஅருள் வைத்தாய்! சரணம், வலியஅந்தக்
கரணங்க ளால்மெலிந்து எய்த்தேன், சரணம், நின் பொற்கழலே
சரணம், தென்கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே!

## பஞ்சாக்கர தேசிகர் மாலை

(மாதவச் சிவஞான யோகிகள் அருளிச் செய்தது)

அறிவே! அருட்செல்வமே! நிறைவே! அரசே! அடியார்
உறவே! என் ஆருயிரே! மணி யே! உரு காதநெஞ்சிற்
பிறிவே! துரியங் கடந்த சிவானந்தப் பேரமுதச்
செறிவே! கருணைப் பிழம்பே! பஞ் சாக்கர தேசிகனே!

பொய்யும், கவடும், கொடுமையும், வஞ்சமும் பூண்டபொல்லாக்
கையன், கலதி, முழுமூட னேனும்நின் கண்ணருளால்
உய்யும் படிஎன்று கூடும்? எந்தாய்! உண்மை யாளர் அன்பு
செய்யும் துறைசையுள் தேவேபஞ் சாக்கர தேசிகனே!

பரிசுஅறி யேன்அருட் பண்புஅறி யேன்எனைப் பற்றும்வினைக்
கரிசுஅறி யேன், அது மாற்றறி யேன், கல ரோடு இணங்கித்
துரிசுக ளேசெயும் பொல்லா உலகத் தொழும்பனுக்குஉன்
தெரிசனம் கிட்டுவது என்றோ? பஞ் சாக்கர தேசிகனே!

மருவேன் உனதடி யார்திருக்கூட்டம் மருவிவஞ்சம்
ஒருவேன், மகளிர் விழிக்கடை நோக்குக்கு உளம்பதைத்து
வெருவேன், அடிமையும் எந்நாள் உனதருள் மேவுவனோ?
திருஆ வடுதுறைத் தேவே! பஞ் சாக்கர தேசிகனே!

ஆனந்த வாழ்வில் அடியார்எல் லாரும் அகம்களிப்ப
நான்இந்த மாயத் தொடக்கினில் வீழ்ந்து நலிதல்நன்றோ!
வான் அந்தம் நீண்ட மதில்ஆ வடுதுறை வாழ்முதலே!
தேன் உந்து பங்கயத் தாளாய்பஞ் சாக்கர தேசிகனே!

வற்றாக் கருணைத் திருநோக்கும் நின்முக மண்டலமும்,
சற்றே முகிழ்த்த குறுமூரலும், தட மார்பழகும்,
பொற்றாளும், சின்முத் திரையும் நெஞ் சூடு பொறித்துவைப்பாய்
செற்றார் புரம்செற்ற தேவே! பஞ் சாக்கர தேசிகனே!

தேறாத நெஞ்சும், தெளியாத சிந்தையும், தேங்கிஇன்பம்
ஊறாத கண்ணும், ஒழியாக் கவலையும், உன்புகழே
கூறாத நாவும் எனக்கே தகும் என்று கூட்டினையே!
சீறாது அருள்செய்யும் தேவே! பஞ் சாக்கர தேசிகனே!

நின்னருள் நோக்கினுக்கு எவ்வள வேனும் நெகிழ்ந்துருகாது
என்னுடை வன்மனம் மின்னார் விழிக்கடைக்கு என்னில் அந்தோ!
வன்னியின் நேர்மெழு காய்உருகா நிற்கும் மாயம் என்னே!
செந்நெறி யாய் நின்ற தேவே! பஞ் சாக்கர தேசிகனே!

பிறவித் துயர்இனி ஆற்றேன், அடைக்கலம்; பேயுலகின்
மறுகித் திரிந்து அலைந்து எய்த்தேன், அடைக்கலம் மங்கைநல்லூர்
உறவைத் தவிர்த்து உய்யக்கொள்வாய்! அடைக்கலம்;
உண்மை அன்பர்
செறிவுக்குள் வாழும்மெய்த் தேவே! பஞ் சாக்கர தேசிகனே!

இருவினை தாம்இவை, மும்மலம் ஈங்கிவை, ஈதுசிவம்,
கருவுறும் ஆருயிர் உண்மை இது என்று காட்டவல்ல
குருபரன் நீயின்றி வேறுஅறி யேன்இக் குவலயத்தில்
திருவெண்ணெய் மெய்கண்ட தேவே! பஞ் சாக்கர தேசிகனே!

**நமச்சிவாய குருவின் நற்றாள் போற்றி!**
**சிவஞான முனிவரின் சீரடி போற்றி !**

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருவாவடுதுறை ஆதீனத்தின் முக்கியத் திருக்கோயில்கள், உபகோயில்கள், ஆதீனக் கட்டளைகள்

## பாடல் பெற்ற தேவாரத் திருத்தலங்கள்

1. திருவாவடுதுறை (நாகை மாவட்டம்) - அருள்தரு ஒப்பிலாமுலையம்மை உடனாய அருள்மிகு கோமுத்தீசுவரர் திருக்கோயில்.
2. மயிலாடுதுறை (நாகை மாவட்டம்) - அருள்தரு அபயாம்பிகை அம்மை உடனாய அருள்மிகு மாயூரநாத சுவாமி திருக்கோயில்.
3. திருமாந்துறை (தஞ்சை மாவட்டம்) - அருள்தரு யோகநாயகி அம்மை உடனாய அருள்மிகு அட்சய நாத சுவாமிதிருக்கோயில்.
4. திருமங்கலக்குடி (தஞ்சை மாவட்டம்) - அருள்தரு மங்கல நாயகி அம்மை உடனாய அருள்மிகு பிராண நாத சுவாமி திருக்கோயில்
5. திருநீலக்குடி (தஞ்சை மாவட்டம்) - அருள்தரு அழகாம்பிகை அம்மை, அருள்தரு தவக்கோலம்மை உடனாய அருள்மிகு மனோக்கியநாத சுவாமி திருக்கோயில்
6. திருவிடைமருதூர் (தஞ்சை மாவட்டம்) - அருள்தரு பெருநலமாமுலையம்மை உடனாய அருள்மிகு மகாலிங்கசுவாமி திருக்கோயில்.
7. திருவீழிமிழலை (திருவாரூர் மாவட்டம்) - அருள்தரு அழகிய மாமுலையம்மை உடனாய அருள்மிகு வீழி நாத சுவாமி திருக்கோயில்
8. திருநல்லூர் (தஞ்சை மாவட்டம்) - அருள்தரு கிரிசுந்தரி அம்மை . உடனாய அருள்மிகு கலியாண சுந்தரேசுவரர் திருக்கோயில்.
9. பழமண்ணிப்படிக்கரை - இலுப்புப்பட்டு (நாகை மாவட்டம்) - அருள்தரு அமிர்தகரவல்லி அம்மை உடனாய அருள்மிகு நீலகண்டேசுவரர் திருக்கோயில்.

## திருவாசகத் திருத்தலம்

10. திருப்பெருந்துறை (புதுகை மாவட்டம்) - அருள்தரு யோகாம்பிகை உடனாய அருள்மிகு ஆத்மநாத சுவாமி திருக்கோயில்.

## பிற சிவத்திருத்தலங்கள்

11. திருவாலங்காடு (நாகை மாவட்டம்) - அருள்தரு வண்டார்குழலி அம்மை உடனாய அருள்மிகு வடாரண்யேசுவரர் திருக்கோயில்.

12. நரசிங்கன்பேட்டை (தஞ்சை மாவட்டம்) - அருள்தரு லோகநாயகி அம்மை உடனாய அருள்மிகு சுயம்பு நாத சுவாமிதிருக்கோயில்.
13. நரசிங்கன்பேட்டை (தஞ்சை மாவட்டம்) - அருள்தரு அட்சயாம்பிகை அம்மைஉடனாய அருள்மிகு அட்சய நாத சுவாமிதிருக்கோயில்.
14. வாணாபுரம் (தஞ்சை மாவட்டம்) - அருள்தரு அபிராமி அம்மை உடனாய அருள்மிகு பாணபுரீசுவரர் திருக்கோயில்.
15. கரைகண்டம் (நாகை மாவட்டம்) - அருள்தரு விசாலாட்சி அம்மை உடனாய அருள்மிகு விசுவநாத சுவாமி திருக்கோயில்.
16. ஆறுமுகனேரி (தூத்துக்குடி மாவட்டம்) - அருள்தரு சிவகாம சுந்தரி அம்மை உடனாய அருள்மிகு சோம நாத சுவாமி திருக்கோயில்.

## நவக்கிரகத் தலம்

1. சூரியனார் கோயில் (தஞ்சை மாவட்டம்) - அருள்தரு சாயாதேவி, உஷாதேவிஉடனாய அருள்மிகு சிவசூரியப் பெருமான் திருக்கோயில்.

## பிற திருக்கோயில்கள்

2. திருநெல்வேலி நகர் - அருள்மிகு சந்தி விநாயகர் திருக்கோயில்.
3. குறுக்குத்துறை (திருநெல்வேலி) - அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்.
4. பனங்குளம் பேராவூரணி வட்டம் - அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்.
5. குறிச்சிகுளம் ஆவுடையார்கோயில் - அருள்தரு முத்துமாரியம்மன் திருக்கோயில்.
6. நரசிங்கன்பேட்டை (தஞ்சை மாவட்டம்) - அருள்தரு கஸ்தூரியம்மன் திருக்கோயில்.
7. திருவாவடுதுறை (நாகை மாவட்டம்) - அருள்தரு திரௌபதியம்மன் திருக்கோயில்.
8. திருவாவடுதுறை (நாகை மாவட்டம்) - அருள்தரு நினைத்ததை முடிக்கும் மாரியம்மன் திருக்கோயில்.
9. திருவாலங்காடு (நாகை மாவட்டம்) - அருள்தரு மகா மாரியம்மன் திருக்கோயில்.
10. திருவாலங்காடு (நாகை மாவட்டம்) - அருள்தரு வடபத்திரகாளியம்மன் திருக்கோயில்.

11. திம்மக்குடி (தஞ்சை மாவட்டம்) – அருள்தரு மாரியம்மன் திருக்கோயில்.
12. வடுமாங்குடி (தஞ்சை மாவட்டம்) – அருள்தரு சீதளாதேவியம்மன் திருக்கோயில்.

## உப கோயில்கள்

1. மயிலாடுதுறை (நாகை மாவட்டம்) – அருள்தரு அறம் வளர்த்தநாயகி அம்மை உடனாய அருள்மிகு ஐயாறப்பர் திருக்கோயில்.
2. மன்னம்பந்தல் (நாகை மாவட்டம்) – அருள்தரு அஞ்சல்நாயகி அம்மை உடனாய அருள்மிகு ஆலந்துறையப்பர் திருக்கோயில்.
3. முட்டம் (நாகை மாவட்டம்) – அருள்தரு பெரியநாயகி அம்மை உடனாய அருள்மிகு பாடலேசுவரர் திருக்கோயில்.
4. பழியஞ்சிய நல்லூர் (தஞ்சை மாவட்டம்) – அருள்தரு காமாட்சியம்மை உடனாய அருள்மிகு கைலாசநாதர் திருக்கோயில்.
5. முள்ளுக்குடி (தஞ்சை மாவட்டம்) – அருள்தரு மனோன்மணியம்மை உடனாய அருள்மிகு கைலாசநாதர் திருக்கோயில்.
6. முள்ளுக்குடி (தஞ்சை மாவட்டம்) – அருள்தரு ஸ்ரீ தேவி பூதேவி உடனாய அருள்மிகு வரதராஜப் பெருமாள் திருக்கோயில்.
7. புழுதிக்குடி (தஞ்சை மாவட்டம்) – அருள்தரு சௌந்தரநாயகி அம்மை உடனாய அருள்மிகு திருமூலநாதர் திருக்கோயில்.
8. புழுதிக்குடி (தஞ்சை மாவட்டம்) – அருள்தரு பெருந்தேவி பத்மாவதி உடனாய அருள்மிகு சீனிவாசப்பெருமாள் திருக்கோயில்.
9. திருவிடைமருதூர் (தஞ்சை மாவட்டம்) – அருள்தரு விசாலாட்சி அம்மை உடனாய அருள்மிகு விசுவநாதசுவாமி திருக்கோயில்.
10. திருவிடைமருதூர் (தஞ்சை மாவட்டம்) – அருள்தரு ஞானாம்பாள் அம்மை உடனாய அருள்மிகு ஐராவதீசுவரர் திருக்கோயில்.
11. திருப்பெருந்துறை (வடநகர்) வடக்கூர் – அருள்தரு சிவகாமசுந்தரி அம்மை உடனாய அருள்மிகு கைலாசநாதர் திருக்கோயில்.
12. திருப்பெருந்துறை (புதுக்கோட்டை மாவட்டம்) – அருள்தரு ஸ்ரீதேவி பூதேவி உடனாய அருள்மிகு வீற்றிருந்த பெருமாள் திருக்கோயில்.
13. குறுக்குத்துறை (மேட்டுக்கோயில்) – அருள்தரு காந்திமதியம்மை உடனாய அருள்மிகு நெல்லையப்பர் திருக்கோயில்.

| | | |
|---|---|---|
| 14. சிவந்திபுரம் (நெல்லை மாவட்டம்) | - | அருள்தரு உலகம்மை உடனாய அருள்மிகு பாபநாச சுவாமி திருக்கோயில். |
| 15. திருவீழிமிழலை (திருவாரூர் மாவட்டம்) | - | அருள்தரு பத்ரவல்லீசுவரி அம்மை உடனாய அருள்மிகு பத்ரவல்லீசுவரர் திருக்கோயில். |
| 16. மஞ்சமல்லி (தஞ்சை மாவட்டம்) | - | அருள்தரு சௌந்தரநாயகிஅம்மை உடனாய அருள்மிகு மந்திரபுரீசுவரர் திருக்கோயில். |
| 17. காலகம் (பேராவூரணி வட்டம்) | - | அருள்தரு ஆனந்தவல்லி அம்மை உடனாய அருள்மிகு ஐராவதீசுவரர் திருக்கோயில். |
| 18. வெள்ளப்பந்தல் (செங்கல்பட்டு மாவட்டம்) | - | அருள்தரு விசாலாட்சி அம்மை உடனாய அருள்மிகு விசுவாநாதர் திருக்கோயில். |
| 19. அரும்பாக்கம் (சென்னை) | - | அருள்தரு திருச்சிற்றம்பல நாயகி அம்மை உடனாய அருள்மிகு திருச்சிற்றம்பலநாதர் திருக்கோயில் |
| 20. திருச்செந்தூர் (விசாகக் கட்டளை) | - | அருள்தரு வள்ளி தெய்வயானை உடனாய அருள்மிகு சண்முகர் திருக்கோயில். |

## ஆதீனம் நிறுவியுள்ள திருக்கோயில் கட்டளைகள்

1. மதுரை (மதுரை மாவட்டம்) - தானகோனேரியப்ப முதலியார் கட்டளை.
2. மதுரை (மதுரை மாவட்டம்) - ஆவுடையப்பபிள்ளை கட்டளை.
3. திருச்செந்தூர் (தூத்துக்குடி மாவட்டம்) - செந்தில் அருட்பணிக் கட்டளை.
4. திருச்செந்தூர் (தூத்துக்குடி மாவட்டம்) - செந்தில் அன்னதானக் கட்டளை.
5. திருச்செந்தூர் (தூத்துக்குடி மாவட்டம்) - செந்தில் திருப்பணிக் கட்டளை.
6. திருச்செந்தூர் (தூத்துக்குடி மாவட்டம்) - செந்தில் விசாகக் கட்டளை.
7. திருச்செந்தூர் (தூத்துக்குடி மாவட்டம்) - செந்தில் பிரதோஷக் கட்டளை.
8. பாபநாசம் (நெல்லை மாவட்டம்) - பிச்சைக் கட்டளை.
9. கல்லிடைக்குறிச்சி (நெல்லை) - விளாபூசைக் கட்டளை.
10. திருக்குற்றாலம் (நெல்லை மாவட்டம்) - விளாபூசைக் கட்டளை.
11. கடையநல்லூர் (நெல்லை மாவட்டம்) - விளாபூசைக் கட்டளை.
12. வள்ளியூர் (குமரி மாவட்டம்) - உதயமார்த்தாண்டம் கட்டளை.
13. ஸ்ரீவைகுண்டம் (தூத்துக்குடி) - சிறுகாலசந்திக் கட்டளை.
14. திருவானைக்கா (திருச்சி மாவட்டம்) - பாப்பம்மாள் சத்திரம்.

ஆதீனத்திற்குரிய பெரிய சிறிய சிவத்தலங்கள், முக்கியத் திருக்கோயில்கள், உப கோயில்கள் மட்டுமன்றி விநாயகர், முருகன், மாரியம்மன், கிராமக் கோயில்கள் என 50க்கும் மேலான கோயில்கள் ஆதீன ஆளுகையில் உள்ளன. மேலும் ஆதீனத்தில் நிறுவியுள்ள மேற்கண்ட திருக்கோயில் கட்டளைகள் மட்டுமன்றி சிதம்பரம் போன்ற முக்கியத் தலங்களில் மண்டகப்படிகளும், கட்டளைகளும் ஏற்படுத்தப்பெற்று சிறப்பாக நடந்து வருகின்றன.

# திருவாவடுதுறை

## திருத்தலத்தின் தனிச்சிறப்புகள்

1. பசுவாக வந்த உமையன்னை தமது பதியை (சிவபெருமானை) பாசத்துடன் வழிபட்டு பேறு பெற்ற பதி என்பதே இவ்வூரின் முதன்மைச் சிறப்பாகும்.
2. இல்லறத்தார் இடர்களைக் களைய அணைத்தெழுந்த நாயகராய் தனிச் சந்நிதி கொண்டு அருள்பாலிக்கும் திருத்தலம்.
3. சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற நால்வர் பெருமக்களால் பாடல்பெற்ற திருத்தலம்.
4. தேவர்கள் இத்தலத்தில் படர் அரசமரமாக விளங்க அதன் கீழ் (போதியம்பலம்) இறைவன் திருநடனம் செய்தருளிய தலம்.
5. தருமதேவதை இத்தலத்து இறைவனை வழிபட்டு அவருக்கு வாகனமாகும் பேறு பெற்று இத்தலத்திலேயே பெரிய நந்தியாக எழுந்தருளிய நந்தித்திருத்தலம்.
6. இத்தலத்து இறைவன் திருமாலுக்குத் துளசி மாலை அளித்து பிருந்திமயல் தீர்த்தருளிய புராணத் திருத்தலம்.
7. அழகிய விநாயகர் அகத்தியமாமுனிவருக்கு ஞானோபதேசம் செய்தருளிய ஞானத் திருத்தலம்.
8. குருத்துரோகம் புரிந்த அக்னிதேவனுக்கும், வெண்குட்ட நோய் பற்றிய அகத்தியருக்கும் சாபவிமோசனம் அளித்தருளிய பரிகாரத் திருத்தலம்.

9. சிவபெருமானின் வியர்வைத் துளியிலிருந்து பிறந்த செவ்வாய், கிரகப்பதம் பெற்று, செவ்வாய்க் கிழமையில் அன்னதானம் செய்து பேறுபெற்ற திருத்தலம்.
10. திருஞானசம்பந்தர் தம் தந்தையின் வேள்விக்காக இத்தலத்து இறைவனிடமிருந்து பூதம் வாயிலாக 1000 பொற்காசுகள் இக்கோயிலின் பலிபீடத்தில் பெற்ற தங்கத் திருத்தலம்.
11. சுந்தரமூர்த்தி நாயனார் தம் உடற்பிணி தீர உளமுருகி இத்தலத்து இறைவனைப் பாடியருளிய தேவாரத் திருத்தலம்.
12. முசுகுந்த மாமன்னனுக்கு மகப்பேறு அருளி இத்தலத்தைத் திருவாரூராகவும், தம்மைத் தியாகேசராகவும் இறைவன் காட்டியருளிய வரந்தரும் திருத்தலம்.
13. திருமூலர் இத்தலத்தில் அரச மரத்தின் கீழ் 3000 ஆண்டுகள் யோகிருந்து 3000 பாடல்களைக் கொண்ட திருமந்திர ஞானப்பெருநூலை அருளிய திருமந்திரத் திருத்தலம்.
14. திருமாளிகைத் தேவர் இத்தலத்து இறைவனை நாள்தோறும் வழிபட்டு பல அற்புதங்களை நிகழ்த்தியருளிய தலம்.
15. அகத்தியர், திருமூலர், திருமாளிகைத் தேவர், போகர், கருவூர்த் தேவர், கொங்கணச் சித்தர் முதலான நவகோடி சித்தர்கள் இத்தலத்து இறைவனை வழிபட்டு அட்டமா சித்திகளைப் பெற்றுவந்த சித்தர் வாழ் திருத்தலம்.
16. கோச்செங்கட்சோழன், சேரமான் பெருமாள் நாயனார், வரகுண பாண்டியன் என மூவேந்தர்களாலும் இத்தலத்தில் தனித்தனி லிங்கங்கள் பிரதிட்டை செய்து வழிபட்டு பேறு பெற்ற தலம்.
17. இத்தலத்து இறைவன் அருளால் சித்தர் சிவப்பிரகாசர் நமசிவாய மூர்த்திகளைக் கொண்டு திருவாவடுதுறை ஆதீனம் ஸ்தாபிதம் செய்தருளிய திருத்தலம்.

## தமிழகத்திலேயே பெரிய நந்தி



நந்தி மண்டபத்தில் இறைவனை நோக்கி மிகப்பெரிய ரிஷபம் (மகாநந்தி) உள்ளது. இதனைத் தருமவிடை என்று தலபுராணம் கூறுகிறது. இக்கல் நந்தியின் உயரம் 14 அடி 9 அங்குலம், அகலம் 11 அடி 3 அங்குலம், நீளம் 16 அடி 4 அங்குலம், சுற்றளவு 41 அடி 3 அங்குலம். இது தமிழகத்திலேயே மிகப்பெரிய கல்நந்தி ஆகும். தனித்தனிக் கருங்கற்களினாலானதுஇந்நந்தி.

இது தஞ்சை பெரியகோயிலில் உள்ள ஒரே கல்லாலான நந்தியை விடப்பெரியது (தஞ்சை கல்நந்தியின் உயரம் 12 அடி ) நந்தித்தலம் எனப் போற்றப் பெறும் இத்திருவாவடுதுறையின் தனிச்சிறப்புகளில் இந்த மகாநந்தியும் ஒன்று. வளர்ந்த நந்தியும் படர்ந்த அரசும் என்பது இவ்வூர் மக்களிடம் வழங்கும் பழமொழி. இம்மகாநந்திக்கு ஒவ்வொரு பிரதோஷ வழிபாட்டின் போதும் திருக்கோயில் பெருவிழாவின் போதும் சிறப்பு அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகின்றன. பெருந்திரளான பக்தர்களின் ஈடுபாட்டுடன் (பங்களிப்புடன்) நடைபெறும் பிரதோஷ வழிபாடு இத்தலத்து தனிச்சிறப்புகளில் ஒன்று.

**புத்திரப் பேறு அருளும் செம்பொன் தியாகேசர்**



ஸ்ரீ தியாகேசப் பெருமான் கிழக்கு நோக்கி தனிச் சந்நிதியில் எழுந்தருளியுள்ளார். முசுகுந்த மாமன்னனுக்குக் குழந்தைப் பேறு நல்கியருளியமையால் இவருக்குப் 'புத்திரத் தியாகேசர்' என்ற திருப்பெயரும் உண்டு. இத்தலத்தில் மாசிலா மணியீசர் முசுகுந்தருக்கு நர்த்தன மண்டபத்தில் வீதிவிடங்கராய் நர்த்தனம் செய்தருள் புரிந்தார். துறைசையில் திருவாரூர் காட்சியைத் தந்தருளினார்.

இத்தியாகேசர் திருச்சந்நிதியில் தினந்தோறும் இரவு இரண்டாம் கால பூஜையின் போது பஞ்சபுராணம் ஓதுவார் மூர்த்திகளால் பாடப்பெறும். மேலும், அவ்வமயம்

*"நீர்கொண்ட செம்பொன் கமலமும் நீலமும் நீங்கரிய*
*வார்கொண்ட முல்லையும் கோங்கும் மென் காந்தளும் மல்கி ஒல்கிச்*
*சீர்கொண்ட ஆவடுதண்துறைச் செம்பொன் தியாகர் வெற்பில்*
*ஏர்கொண்ட தெய்வமலர்ப் பூங்கொடி ஒன்று எதிர்உற்றதே."*

எனத் தொடங்கும் தொட்டிக்கலை சுப்பிரமணியமுனிவர் இயற்றிய திருவாவடுதுறைக் கோவைப் பாடல்கள் பாடப் பெறுகின்றன. இவ்வழக்கம் பல்லாண்டுகளாக இச்சந்நிதியில் நடைபெற்று வருகிறது.

ஆண்டுதோறும் ரத சப்தமிப் பெருவிழாவின் ஐந்தாம் திருநாளில் தியாகராசப் பெருமான் அடியார்கள் போற்ற அசைந்து அசைந்து வந்து நர்த்தன மண்டபத்தில் நர்த்தனம் புரிந்தருளும் திருக்காட்சி நடைபெறும். இப்பெருவிழாவின் 5,8,10ஆம் திருநாட்களில் தியாகேசருக்கு லவண்டை, சுற்று மத்தளம் போன்ற இசைக் கருவிகள் வாசிக்கப்பெறும். மனமார இப்பெருமானைப் போற்றி வழிபட்டு நற்பேறு பெறலாம். குழந்தைப் பாக்கியம் அற்றோர் இப்பெருமானுக்கு சிறப்பு வழிபாடு செய்து மனமுருக வேண்டிக் கொண்டால் புத்திரப் பேறு நிச்சயம் பெறுவர். இதுபோல் பலனடைந்தோர் பலர் உண்டு.



**திருமூலரின் ஜீவசமாதித் திருக்கோயில்**

அம்மன் கோயிலின் எதிரிலுள்ள பிரகார நுழைவாயிலின் வழியாக அப்பிரகாரத்தை வலம் வரும் போது வாயு மூலையில் (வடமேற்கு) அமைந்திருக்கும் திருமூலநாயனாரின் ஜீவ சமாதித் திருக்கோயிலைக் காணலாம். மூவாயிரம் ஆண்டுகள் தவமிருந்து ஆண்டுக்கொரு பாடலாக மூவாயிரம் திருமந்திரப் பாடல்களைத் தந்தருளிய திருமூலரின் திருவுருவம் அந்த ஜீவ சமாதியின் மேலேயே அமைக்கப் பட்டுள்ளது. கருவறை இடையாழி, அர்த்த மண்டபம், முன் மண்டபம், வெளி மண்டபம் என்ற அமைப்பில் உள்ள திருமூலரின் இத்திருக்கோயில் தியானம் செய்வதற்கு அமைதியான சூழலையும் திருமூலரின் நேரடி அருட்பார்வையையும் பெற்றுள்ளது. திருமூலர் சந்நிதியில் இன்றும் உள்ளூர், வெளியூர் அன்பர்கள் பலரும் அமர்ந்து தியானம் செய்து பெரும் பயன் பெற்றுள்ளனர் ; பெறுகின்றனர்.

**திருமாளிகைத் தேவர்**

திருவாவடுதுறை ஆதீனத் திருமடத்துள் திருமாளிகைத் தேவருக்குத் தனிக் கோயில் உள்ளது. இவர் தம் குருவின் மீது இருந்த பக்தியின் காரணமாக அவரது திருவடியினைத் தம் முன்னே வைத்துத் தாம் அதன் பின் யோக நிலையில் அமர்ந்த காட்சியில், இவ்வாதீனப் பிரதம பரமாசாரியராக விளங்கும் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் திருக்கோயிலின் இடது பாகத்திலே தனித் திருக்கோயிலில் இருந்து அருள் புரிகின்றார்.



(இவ்விடத்தினை இத்திருமடத்துள்ளே தரிசிக்கலாம் ) . அவருடைய திருவுருவம் நான்கு திருக்கைகளோடு கூடியதாய் அமைந்துள்ளது. இவர் குருபணிவிடை செய்யவும், சிவபூசை செய்தற்பொருட்டும் தமது தவவலிமையால் வேறு இரண்டு திருக்கைகளை உண்டாக்கிக் கொண்டார் என்பது செவி வழிச்செய்தியாகும். கோமுத்தீசுவரர்க்கு

உச்சிகால பூஜை முடிந்தவுடன் திருமாளிகைத் தேவர்க்கும் அச்சிவாச்சாரியாராலே அபிஷேக ஆராதனைகள் செய்விக்கப் படுகிறது. அதன் பின்னரே மடாலயத்தில் மாகேஸ்வர பூஜை நடைபெறுவது வழக்கமாக இன்றும் இருந்து வருகிறது. இம்மரபை மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் தனிப்பாடலால் நாம் நன்கு அறியலாம்.

*பேசு புகழ்ச்சுப் பிரமணிய தேசிகன்பொன்*
*வீசு கழற்கடியேன் விண்ணப்பம் - நேசம்*
*வருதிருமா ளிகைத்தே வன்பூசை யாயே*
*கருதுபந்தி யாதல்வழக் கம்.*

**அற்புதங்களில் சில :**

1.திருமாளிகைத்தேவர் ஒருசமயம் சுடுகாட்டில் எரிந்து கொண்டிருந்த சவத்தின் புகையை நறுமணம் கமழும்படிச் செய்தார். 2. கொங்கணவர் என்ற சித்தருடைய கமண்டலத்தில் என்றும் வற்றாத தண்ணீரை வற்றச் செய்தார். 3. சிவபெருமானுக்கு நிவேதனமாகித் தமக்கு வந்த பயிற்றஞ் சுண்டலை தம் திருமடத்தில் பாத்திகட்டி விதைத்துப் பலன்பெறச் செய்தார். 4. இவர் திருவீழிமிழலையில் இருந்த காலத்தில் அங்கு நடந்த தேர்த்திருவிழாவின் பொழுது மக்களால் இழுக்கமுடியாது ஓடாதிருந்த தேரினுடைய வடத்தைக் கழற்றிவிட்டுத் தானே அந்தத் தேரினை ஓடுமாறுச் செய்தார்.

## ஸ்தல விருட்சம் (அரச மரம்)



அரச மரம். பிறமரங்களுக்கெல்லாம் அரசனாகப் போற்றப் பெறுகிறது. ஒரு அரசமரத்தை நட்டால் அவர்களின் சந்ததியினர் அனைவருக்கும் சொர்க்கப் பதவி கிடைக்கும் என விருட்ச ஆயுர்வேதம் என்னும் நூல் கூறுகிறது. அரசமரம் மழையைக் கவர்ந்திழுக்கும் ஆற்றல் வாய்ந்தது. நீருண்ட கார் மேகங்களைக் கவர்ந்து இழுக்கவே, வேள்விகளில் அரசங்குச்சி ( அரசஞ்சமித்து ) பயன்படுத்தப் படுகிறது. மரங்களில்

நான் அரசமரமாக இருக்கிறேன் என்று கீதையில் கண்ணன் கூறுகிறார். இன்னும் பல கிராமங்களில் ஊர்ப் பொது சபை கூடுவது அரசமரத்தின் கீழேதான். நியாயமான தீர்ப்புகள் அரசமரத்தடியில் தான் வழங்கப்பட்டு வந்தன.

தெய்வத் தன்மையும் மருத்துவக் குணமும் ஒருங்கே கொண்ட இம்மரத்தை அச்வத்த விருட்சம் என்பர் வடநூலார். அரச மரத்தின் தெய்வாம்சத்தை விளக்கும் ஸ்லோகம் ஒன்று உண்டு. "*மூலதோ பிரம்ம ரூபாய மத்யதோ விஷ்ணு ரூபிணே அக்ரத: சிவரூபாய வ்ருக்ஷ ராஜாய தே நம:*" அரசமரத்தின் வேர்ப்பாகம் பிரம்மாவின் ரூபம்; நடுப்பாகம் திருமால் ரூபம்; உச்சி சிவஸ்வரூபம். மும்மூர்த்திகளும் இம்மரத்தில் விளங்குவதால் அரசமரத்தை வணங்கி அனைவரின் அருளும் பெறலாம்.

அரச மரத்தைக் காலை ஒன்பது மணிக்குள் ஏழுமுறை வலம்வந்து வணங்குதல் சிறப்பு. இரவில் இம்மரத்தைச் சுற்றக் கூடாது. இம்மரத்தைச் சனிக்கிழமையில் மட்டுமே தொட்டு வணங்கலாம். பிற நாட்களில் தொடக் கூடாது. அரசமரத்தைச் சுற்றி வந்து வணங்கும் போது அக்காற்று நம்மீது படுகிறது. அரசமரக் காற்று ஆயுளை அதிகரிக்கும்; நோய்களைத் தீர்க்கும்; பாவங்களைப் போக்கும்.

குழந்தைப்பேறு வேண்டுவோர் அரசமரம் சுற்றிப் பயன்பெறுவது தமிழகத்து தொன்று தொட்ட வழக்கம். அரசமரத்தைப் போதி மரம் என்று கூறுவதும் உண்டு. திருமூலர் ஆண்டுக்கு ஒரு பாடலாக 3000 பாடல்கள் எழுதியது அரசமரத்தின் கீழேதான்.

திருவாவடுதுறை திருக்கோயிலில் உள்ள அரசமரத்தின் கீழே சிவபெருமானும் நடனத் திருக்கோலத்தில் நடராசப் பெருமானாகக் காட்சி தந்தருளினார். அதனால் போதியம்பலம் என்றொரு பெயரும் இத்தலத்திற்கு உண்டு.

இத்தகு சிறப்பு மிக்க அரச மரத்தைத் தல விருட்சமாகக் கொண்ட இத்தலத்திற்கு வந்து இப்புண்ணிய அரசமரத்தைச் சுற்றி வணங்கி வழிபட்டு நல்லருள் பெற்று நாளும் இன்புற்று அனைவரும் நல்வாழ்வு பெறுவார்களாக.

**'ஆ' வணங்கும் ஆவடுதுறை**

திருவாவடுதுறைக்கும் மாடுகளுக்கும் (எருது, பசு) நிறையவே தொடர்பு உண்டு. ஒரு காலத்தில் ஆக்கள் (பசுக்கள்) நிறைந்துள்ள ஆற்றுத் துறையாக இருந்தமையால் தான் ஆ அடுதண் துறை என இவ்வூர் வழங் கலாயிற்று. உமையம்மை 'ஆ' வடிவத்தில் இத்தலத்து இறைவனை வழிபட்டு அரனோடு அணைந்த மையாலும் ஆவடுதுறை எனலாயிற்று. திருமூலர் இத்தலத்திற்கு வந்தபோது ஆவினங்கள் நிறைந்திருந் தமைக் கண்டார்; அவற்றின் துயர் களைந்தார் என்றும் தலவரலாறு கூறுகிறது.



இத்தகு சிறப்பு மிக்க பசுக்களுக்கு அருள்புரியும் ஈசர் இத்தலத்து கோமுத்திநாதர். இப்பெருமான் பசுக்களுக்கு மட்டுமன்றி ஆண்பசுவாகிய காளைக்கும் (ரிஷபத்திற்கும்) இத்தலத்தில் அருள்புரிந்த வரலாறு உண்டு. அதனால் இவ்வூரிலுள்ள மக்களும் சுற்று வட்டாரத்தினரும் தங்கள் வீட்டு மாடுகளுக்கு கோமாரி போன்ற நோய்கள் வந்தாலும், கன்று ஈனாதிருப்பினும் இக்கோயில் பெரியநந்திக்கு சிறப்புவழிபாடு நிகழ்த்தி பலன்பெறுகின்றனர்.



**ஸ்ரீ அணைத்தெழுந்த நாயகர்**



உமையின் வழிபாட்டில் மகிழ்ந்து இறைவன் இறைவியின் பசு உருநீக்கி பழைய திருவுருவில் அவரை அணைத்துஎழுந்தருளினார். இத்தலத்திலேயே அணைத்தெழுந்த நாயகர் எனும்திருப்பெயர் கொண்டு உமையொடு இணைந் திருந்து தம்பதி சமேதராய் அருள்பாலிக்கின்றார்.

இன்றும் இத்திருக் கோயில் வந்து தம்மை வழிபடும்கணவன்மனைவி யர்க்கிடையே எழும் கருத்து வேறுபாடுகளையும், பிரிந்து வாழும் தம்பதியரின் மனக் கவலைகளையும், அவர்கள் ஜாதகங்களிலுள்ள தோஷங்களையும் நீக்கி இல்லற வாழ்வை இன்பமயமாக்கி அருள்பாலித்து வருகின்றார் அருள்மிகு அணைத்தெழுந்த நாயகர்.

சிவபெருமான் தேவியை அணைத்தெழுந்ததும் இத்தலத் திலேயே இத்திருக்கோலத்திலேயே இருந்ததும் மக்களின் இல்லற வாழ்வு சிறக்கவே என்ற குறிப்பை நாம் உணர்ந்து வழிபடவேண்டும். இன்றும் தங்களுக்குள் எழுந்த கருத்து வேறுபாடுகளில் உழன்று இன்னலுறும் தம்பதியர் இத்திருவாவடு துறை திருக்கோயில் வந்து அணைத்தெழுந்த நாயகரைத் தொழுது அர்ச்சித்து மனமுருக வேண்டி நலம் பெற்று நிம்மதியுடன் வாழ்கின்றனர் என்பது கண்கூடு.

**பொற்காசுகள் தந்த புகழ்மிக்க பலிபீடம்**



மகாநந்திக்கு பின்பக்கம் உயர்ந்த பலிபீடம் உள்ளது. இப்பலிபீடம் தொன்மை சிறப்பு வாய்ந்தது. சுமார் 1300 ஆண்டுகளுக்கு முன்னர் இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் எழுந்தருளிய போது அவரின் வேண்டுதலை ஏற்று இத்தலத்து இறைவன் அருள்மிகு ஆவடுதுறை அரனார் பூதம் வாயிலாக ஆயிரம் பொற்காசுகள் நிறைந்த 'பொற்கிழி'யினை இப்பலிபீடத்தில் வைத்தருளினார். பலிபீடத்திலிருந்து பொற் காசுகளை எடுத்த ஞானசம்பந்தர் அவற்றைத் தம் தந்தையாரிடம் கொடுத்து, இப்பொற் காசுகள் மேலும் மேலும் வளரும், தாங்கள் கவலையின்றி வேள்விகளை விதிப்படி செய்வீராகுக என்றருளினார்.

இவ்இறையற்புதச் செயலைச் சேக்கிழாரும் பிறரும் வியந்து போற்றுகின்றனர். இன்றும் இத்திருக்கோயிலில் ஆண்டுதோறும் நடைபெறும் ரதசப்தமிப் பெருவிழாவின் ஐந்தாம் திருநாளில் ஸ்ரீஞானசம்பந்த சுவாமிகள் பொன்உலவாக் கிழி பெற்று மகிழ்ந்த ஐதீக விழா நடைபெறுகிறது. பூதம் இப்பலிபீடத்தில் பொற்காசுகள் கொண்டுவந்து வைக்கும் பொழுது அப்புராண நிகழ்வு படிக்கப்பெறும். சிறந்த ஓதுவார் மூர்த்திகள் ஞானசம்பந்தரின் திருப்பதிகத்தினை ஓதுவதும், திருஞான சம்பந்த சுவாமிகள் அலங்கரிக்கப்பட்ட புதுப்பல்லக்கில் திருவீதியுலா எழுந்தருளுவதும் காணக்கண் கொள்ளாத் திருக்காட்சி. இவ்அருட்நிகழ்வைப் போற்றும் வகையில் அவ்வமயம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள், ஓதுவார் மூர்த்திகள் ஒருவருக்கு விருதும் ரூ. 5000/- பொற்கிழியும் வழங்கி வாழ்த்தியருளுகின்றார்கள்.

## திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய

# திருவாவடுதுறை தலப்பதிகம்

*இடரினும் தளரினும் எனதுறுநோய்*
*தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்*
*கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை*
*மிடறினில் அடக்கிய வேதியனே*

*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 1*

இதன் பொருள் : ஆவடுதுறை உறை அரனே! துன்பம், தளர்ச்சி, வினைத் தொடர்ச்சி ஆகிய எக்காலத்தும் உன்னுடைய திருவடிகளைத் தொழுதெழுவேன். திருப்பாற்கடலில் அமுதோடுகலந்து தோன்றிய நஞ்சை உண்டு உலகைக் காத்த வேதியனே! *வேள்விக்காகத் தந்தையார் கேட்கும் பொருளைத் தனையன் கொடுக்கமுடியாத நிலை உண்டானால் அடியவரை இறைவன் ஆட்கொள்ளும் நிலை இதுவோ என்று உலகம் கூறும். அதுவோ உனது இன்னருள்!

*வாழினும் சாவினும் வருந்தினும்போய்*
*வீழினும் உனகழல் விடுவேன் அல்லேன்*
*தாழிளந் தடம்புனல் தயங்குசென்னிப்*
*போழிள மதிவைத்த புண்ணியனே*

*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 2*

கங்கையும்,இளம்பிறையும் விளங்குகின்ற சென்னியை உடைய புண்ணியனே! வாழ்வு, சாவு, வருத்தம், வீழ்வு ஆகிய எக்காலத்தும் உன் திருவடிகளை விடமாட்டேன்.

---

*நாலடிமேல்வைப்பாகவரும் இவ்வரிகளின் பொருளை ஏனையபாடல்தோறும் கூட்டுக.

*நனவினும் கனவினும் நம்பாஉன்னை*
*மனவினும் வழிபடல் மறவேன் அம்மான்*
*புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த*
*கனல்எரி அனல்புல்கு கையவனே.*

*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 3*

புனலையும் கொன்றைப்பூவையும் முடியில் அணிந்தும் கையில் தீயை ஏந்தியும் திகழ்பவனே! நனவு கனவு ஆகிய எக்காலத்திலும் உன்னை வழிபடுதலை மறவேன்.

*தும்மலொ டருந்துயர் தோன்றிடினும்*
*அம்மலர் அடியலால் அரற்றாதென் நாக்*
*கைம்மல்கு வரிசிலைக் கணையொன்றினால்*
*மும்மதில் எரிஎழ முனிந்தவனே*

*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 4*

கையில் ஏந்திய வில்லில் தொடுத்த கணை ஒன்றால் மூன்று மதில்களை அழித்தவனே! தும்மல் இருமல் அரிய துன்பங்கள் ஆகியன வருங்காலத்தும் அழகிய மலர்போன்ற உன் திருவடிகளையல்லது அரற்றாது என்நா.

*கையது வீழினும் கழிவுறினும்*
*செய்கழல் அடியலால் சிந்தைசெய்யேன்*
*கொய்யணி நறுமலர் குலாயசென்னி*
*மையணி மிடறுடை மறையவனே*

*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 5*

கொய்யப்பட்ட அழகிய நறிய மலர்கள் விளங்கும் திருமுடியையும் நீலகண்டத்தையும் உடையவனே! கைப்பொருள் தவறினாலும், வேறுவகை இழப்புக்கள் உண்டானாலும் உனது சிவந்த திருவடிகளை அல்லது வேறொன்றையும் சிந்தை செய்யேன்.

*வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும்*
*எந்தாய்உன் னடியலால் ஏத்தாதென்நா*
*ஐந்தலை யரவுகொண் டரைக்கசைத்த*
*சந்தவெண் பொடியணி சங்கரனே*

*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 6*

ஐந்தலை நாகத்தை இடையில் கட்டி, சந்தனமும் திருநீறும் அணிந்து விளங்கும் சங்கரனே! எந்தையே! கொடிய துன்பம் உண்டானபோதும் அச்சம் உண்டானபோதும் உன் அடியல்லால் ஏத்தாது எனது நா.

*வெப்பொடு விரவியோர் வினைவரினும்*
*அப்பாவுன் அடியலால் அரற்றாதென்நா*
*ஒப்புடை ஒருவனை உருவழிய*
*அப்படி அழலெழ விழித்தவனே*

*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை யரனே. 7*

அழகிய தனக்குத்தானே ஒப்பாக விளங்கும் மன்மதனை எரித்தழித்தவனே! அப்பா ! கொடிய வெம்மையை விளைக்கும் தீவினை என்னைத் தாக்கினும் என்நா உன் திருவடிகளையே ஏத்தும்.

*பேரிடர் பெருகியோர் பிணிவரினும்*
*சீருடைக் கழல்அலால் சிந்தைசெய்யேன்*
*ஏருடை மணிமுடி யிராவணனை*
*ஆரிடர் படவரை அடர்த்தவனே*

*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை யரனே. 8*

அழகிய மணிமுடியை உடைய இராவணனை இடர்ப் படுமாறு அடர்த்த இறைவனே! பெருந்துன்பத்தோடு பிணி வந்தாலும் உனது சீருடைக்கழல்களையல்லால் சிந்தை செய்யேன்.

*உண்ணினும் பசிப்பினும் உறங்கினும்நின்*
*ஒண்மல ரடியலால் உரையாதென்நா*
*கண்ணனும் கடிகமழ் தாமரைமேல்*
*அண்ணலும் அளப்பரி தாயவனே*
*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை யரனே. 9*

திருமாலும் பிரமனும் அளந்தறிய இயலாத அடி முடியுடைய வனே! உண்ணும்போதும், பசி வரும்போதும், உறங்கும் போதும் நின் திருவடிகளையல்லாது என்நா உரையாது,

*பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்*
*அத்தாவுன் னடியலால் அரற்றாதென்நா*
*புத்தரும் சமணரும் புறன்உரைக்கப்*
*பத்தர்கட் கருள் செய்து பயின்றவனே.*
*இதுவோஎமை ஆளுமா றீவதொன் றெமக் கில்லையேல்*
*அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை யரனே. 10*

புத்த சமயத்தாரும், சமண சமயத்தாரும் புறங்கூறப் பத்தர்கட்கு அருள் செய்யும் பரமனே! அத்தா! பித்து ஏறி மயங்கிப் பிணிவாய்ப்பட்டு இடர் உறினும் உன் அடியல்லால் என்நா அரற்றாது.

*அலைபுனல் ஆவடு துறைஅமர்ந்த*
*இலைநுனை வேற்படை யெம்இறையை*
*நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன*
*விலையுடை அருந்தமிழ் மாலைவல்லார்*
*வினையாயினநீங் கிப்போய் விண்ணவர் வியனுலகம்*
*நிலையாகமுன் ஏறுவர் நிலமிசை நிலையிலரே. 11*

அலைபுனல் சூழ்ந்த ஆவடுதுறையிலமர்ந்த, இலைபோன்ற நுனியை உடைய முத்தலைச் சூலம் ஏந்திய எம் இறைவன்மீது ஞானசம்பந்தன் பொன்பெறும் பொருட்டுப் பாடிய இப்பதிகத்தை ஓதுபவர் வினைகள் யாவும் நீங்கி விண்ணவர் வியனுலகினை நிலையாகப் பெறுவர்.

திருச்சிற்றம்பலம்



ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

